12th March 1959]

THE HON. SRI M. BHAKTAVATSALAM: மூன்ருவது செங்கற்பட்டு ஜில்லாவில் இருக்கிறது. அதாவது மட்டன் அண்டு ஹேரீ டைப். மட்டன் டைப்பெல்லாம் நம் ஊர்தான்.

SRI A. R. SUBBIAH MUDALIAR: பஞ்சாப் மாகாணத்தில் நல்ல மாடுகள் கிடைக்கின்றன. இனமாகக் கொடுக்க அவர்கள் தயாராக இருக்கிருர்கள். அதை வாங்கி சர்க்கார் வளர்ப்பார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இனமாகக் கொடுக்க தேவையில்லை. அது தெருவிலே விடப்பட்டிருக்கிறது. அதைக் கொண்டு வந்தால் வளர்க்கலாம் என்று இருக்கிறது. அது ஒங்கோல் மாடு மாதிரி இருக்கிறது. மத்திய சர்க்கார் அதைப் பிடித்துத் தருவதாகச் சொல்லியிருக்கிருர்கள். ரயில் சத்தம் தான் நாம் கொடுக்கவேண்டும். அது 100 ரூபாய்க்கு மேல் ஆகாது. நல்ல மாடுகளாக வ ங்கி இங்கே வளர்ப்புக்கு விடலாம் என்று யோசித்துக்கொண்டிருக்கிரேம்.

SRI A. GOVINDASAMY : வளவனூரிலே ஒரு சப்ளிமென்டரி எக்ஸ்டென்ஷன் சென்டர் வைப்பதாக பட்டியலில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. வளவனூரில் எப்பொழுது திட்டம் அமுலுக்கு வரும் என்று அமைச்சர் அவர்கள் சொல்ல முடியுமா? 9 a.m.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த ஆண்டிலே வரும். ஆனால், எப்பொழுது தொடங்கப்படும் என்பதற்கு இப்பொழுது என்னிடம தகவல் இல்லை.

* 736 Q.—SRI M. K. SOMASUNDARAM (on behalf of Sri V. Sankaran) : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) how much money was allotted for increasing the cattle-wealth of the State in the Second Five-Year Plan period ; and

(b) the amount actually spent during the said period till now ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) Rs. 133·07 lakhs.

(b) Rs. 34·67 lakhs.

*Fair rent*

* 737 Q.—SRI R. SRINIVASA IYER (on behalf of Sri S. Lazar) : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether there is any proposal before the Government to revise the definition of 'Fair Rent' in the Madras Cultivating Tenants (Payment of Fair Rent) Act, 1956?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

*Hostel for Harijans*

*738 Q.—SRI P. G. MANICKAM : கனம் பொதுமராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வடகைக் கட்டிடங்களிலிருக்கும் ஹரிஜன மாணவர்கள் மாணவிகளுடைய ஹாஸ்டல் கட்டிடங்களுக்கு அரசாங்க மூலம் கட்டிடங்கள் கட்டப்படுவதற்காக 1958–59–ம் வருஷத்திலே ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை எவ்வளவு?

(ஆ) எந்தெந்த இடங்களிலே ஹாஸ்டல் கட்டிடங்கள் கட்ட இத் தொகை செலவழிக்கப்படும்?

THE HON. SRI P. KAKKAN : (a) Rs. 6·6 lakhs has been allotted for the year 1958–59.

(b) Government have sanctioned the construction of Government hostels in Madras, South Arcot, and Tanjore during 1958–59.

SRI M. K. SOMASUNDARAM : திருநெல்வேலி ஜில்லாவில் ஒரு ஹரிஜன ஹாஸ்டல் கட்டவேண்டுமென்று நான் கூறியிருந்தேன், அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN: திருநெல்வேலி ஜில்லாவில் மட்டுமல்ல எல்லா ஜில்லாக்களிலும் ஜில்லாதோறும் இரண்டு ஹாஸ்டல்கள் கட்ட வேண்டுமென்று அரசாங்கம் உத்தேசித்திருக்கிறது. ஜில்லாத் தலை நகரில் ஒன்றும், ஜில்லாவின் இதர பாகங்களில் முக்கியமான இடத்தில் ஒன்றும் திறக்கப்படும். இதுபற்றி ஹரிஜன நல இலாகா டைரக்டர் அவர்களை ரிபோர்ட் கேட்டிருக்கிறோம். அவரிடமிருந்து ரிபோர்ட் வந்த பிற்பாடுதான் அதுபற்றி முடிவு செய்யப்படும்.

SRI P. G. MANICKAM : 1958–59-ல் ஒதுக்கப்பட்ட தொகையிலிருந்து எந்த எந்த ஹாஸ்டல்கள் கட்டப்பட தீர்மானிக்கப்பட்டன? இப்பொழுது எந்த எந்த ஹாஸ்டல்கள் கட்டப்பட்டுவருகின்றன. ?

THE HON. SRI P. KAKKAN: சென்னை நகரத்திலே எம்.ஸி. ராஜா ஹாஸ்டலுக்கு 1,94,000 ரூபாயிலே கட்டுவதற்காக முடிவு எடுக்கப்பட்டது. அந்த இடமெல்லாம் இப்பொழுது வாங்குவதற்கு ஏற்பாடு செய்து, எஸ்டிமேட், ப்ளான் வந்துவிட்டது. அது பரிசீலனையில் இருக்கிறது. பரிசீலனை முடிந்த பிற்பாடு வேலை ஆரம்பிக்கப்படும். அடுத்தப்படியாக, தென்னாற்காடு ஜில்லாவில், சிதம்பரத்தில் நந்தனார் ஹாஸ்டல் பெண்களுக்காக கட்டுவதற்கு 3,60,000 ரூபாய் ஒதுக்கப்பட்டது. அந்த வேலை வெகு சீக்கிரம் ஆரம்பிக்கப்படும். சிதம்பரத்திலேயே பையன்களுக்காக ஒரு ஹாஸ்டல் கட்டுவதற்காகவும் ஏற்பாடு செய்திருக்கிறோம். அங்கே அந்த வேலை ஒரு பகுதி கட்டி முடிந்திருக்கிறது. இன்னொரு பகுதி வேலை நடந்துகொண்டிருக்கிறது. தஞ்சையில் மாணவர்களுக்காக ஹாஸ்டல் கட்டுவதற்குப் பணம் ஒதுக்கப்பட்டது. அந்த வேலை நடந்து பூர்த்தியாகும் கட்டத்தில் இருக்கிறது. வெகு சீக்கிரத்தில் ஹாஸ்டல் திறக்கப்படும். அந்த நான்கு இடங்களில்தான் ஹாஸ்டல் கட்டிடங்கள் கட்ட ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

SRI M. K. SOMASUNDARAM: பாளையங்கோட்டையில் இரண்டு கல்லூரிகள் இருக்கின்றன. அவைகளில் படிக்கும் ஹரிஜன மாணவர்கள் மூன்று இடங்களில் உள்ள ஹாஸ்டல்களில் வாடகை கொடுத்து இருக்கிறார்கள். அதற்கு முதல் இடம் கொடுத்து மூன்று ஹாஸ்டல்களையும் ஒரே இடத்தில் இருக்கும்படி கட்டுவதற்கு அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI P. KAKKAN: நான் முன்பே சொன்னேன். நான்கு இடங்களில் கட்டிடம் கட்டுவது ஏற்கனவே முடிவுசெய்யப்பட்டு திட்டப்படி பணம் செலவழிக்கப்படுகிறது. இனிமேல் கட்டப்படும் ஹாஸ்டலைத் திருநெல்வேலி நகரத்திலா, பாளையங்கோட்டை நகரத்திலா அல்லது எந்த இடத்தில் கட்டினால் மாணவ, மாணவிகளுக்கு சௌகரியமாக இருக்கும் என்று தெரிந்தால் அங்கே கட்டலாம்.

## *Administration Reports*

* 739 Q.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Chief Minister be pleased to state—

(a) whether the Government have examined the possibility of avoiding the avoidable delay in issuing Administration Reports; and